# சத்துமிகுந்த, சுவையான
# பிரிட்டானியா க்ளாக்ஸோ பிஸ்கட்டுகள்




## வளரும் குழந்தைகளுக்கு
## சுவையான துணை

பிரிட்டானியா க்ளாக்ஸோ பிஸ்கட்டுகள் அருமையான தனிச் சுவையோடு மேம்பட்டு விளங்குவது ஏன்? சத்துச் செறிந்த ஆரோக்கியமான குணச்சிறப்பே காரணம். ஆசையோடு குழந்தைகள் அவற்றை விரும்பிச் சுவைத்து வளருகின்றனர்! பிரிட்டானியா க்ளாக்ஸோ பிஸ்கட்டுகள்— வளரும் குழந்தைகளுக்குச் சுவையான துணை.

**பிரிட்டானியா**

**பிஸ்கட்டுகள் மிகச் சிறந்தவை**

லின்டாஸ்-BBC.GLX 6-140 TM

# உங்கள் அசோக் லேலண்ட் வண்டியின் திறமை குன்றாமல் இருக்க உதவுவது எது?

# லேபார்ட்ஸ்






புகழ் பெற்ற அசோக் லேலண்ட் வண்டிகளைத் தயாரிப்பவர்களே லேபார்ட்ஸ் உறுப்புகளையும் தயாரிக்கிறார்கள்.

வண்டிகள் தயாரிப்பதில் காட்டப்படும் ஆர்வமும் அக்கறையும் அசல் உறுப்புகளைத் தயாரிப்பதிலும் காட்டப்படுகின்றன. தரம் வாய்ந்த இந்த உறுப்புகளைத் தயாரிப்பதற்குத் தேவையான தொழில் திறமையும் நுட்ப அறிவும் அசோக் லேலண்ட் நிறுவனத்துக்கு மட்டுமே உண்டு.

அசோக் லேலண்ட் வண்டிகளுக்கான அசல் உறுப்புகள் லேபார்ட்ஸ்தான். இவற்றைத் தயாரிப்பது அசோக் லேலண்ட்.

எனவே லேபார்ட்ஸ் வாங்கினால் சிறந்த உறுப்புகளையே வாங்குகிறீர்கள் என்று அர்த்தம். தரம், வேலைப்பாட்டு நயம், நுணுக்கம், உறுதி— எல்லாவற்றிலுமே அவை சிறந்தவை.

லேபார்ட்ஸ் என்று கேட்டு வாங்குங்கள். அசல் உறுப்புகள்தான் உங்கள் வண்டியின் திறமை குன்றாமல் இருக்க உதவும்.






**அசோக் லேலண்ட் லிமிடெட்**
சென்னை 600 057

**அசோக் லேலண்ட் வண்டிகளுக்கான அசல் உறுப்புகள்**

உங்கள் வண்டியின் நலனைப் பேணுங்கள். லேபார்ட்ஸ் உபயோகியுங்கள்.

FDS AL 2487A TAM

# அன்றும் இன்றும்



நேற்று நிறுவப்பட்டது ஜோதி மோட்டார்



இன்றே காணமுடிந்தது இன்ப நாள் இதுவே.

முன்னேற்றத்தின் இரகசியம்—

# ஜோதி மோட்டார்

வெற்றி மிகு ஜோடி



ஜோதி
மோட்டார்



ஜோதி
ஸ்டார்ட்டர்

அதி நவீனத் தொழில்நுட்ப அறிவும், ஆண்டாண்டு கால அனுபவமும் ஜோதி எலக்ட்ரிக் மோட்டார்களை உற்பத்திசெய்ய வழி கோலின; சிறப்பாக வழிகாட்டிய வல்லுனர்களின் உதவியும், கடுமையான பரிசோதனைகளும் அதற்கு உறுதுணை புரிந்தன. ஜோதி ஆராய்ச்சி நிலையத்தினால் உருவாக்கப்பட்ட இம் மோட்டார், வேறெந்த மோட்டாரிலும் கிட்டாத அளவுக்கு, பழுதில்லாப் பணியை வழங்குகிறது. அடிக்கடி பழுதுபார்க்கும் தொல்லையிலிருந்து விடுவிக்கிறது.



## ஜோதி லிமிடெட், பரோடா

ஹைட்ராலிக்ஸ் • எலக்ட்ரிகல்ஸ் • பவர் எலக்ட்ரானிக்ஸ்

கிளை: எய்ர் லைன்ஸ் ஹோட்டல், 177/179, மவுண்ட் ரோடு, சென்னை. போன் 85007 வியாபாரிகள்: வி.வி. & கோ., xxx/613 மஹாத்மா காந்தி ரோடு, கொச்சி 682016, ராஜும் & கோ, 61, ஸுதி ரோடு, ஈரோடு; மேலக்கடை எலக்ட்ரிகல்ஸ், 215 மெய்ன் ரோடு, பெண்ணாடம் 606 105; ஆக்ட் ஏஜென்சீஸ், நம்பர் 8, ந்யூ கொழும்பு ஸ்டோர்ஸ், மாயூரம்; ப்ரீமியர் இன்டஸ்ட்ரீஸ், 80/81, செம்புதாஸ் ஸ்ட்ரீட், சென்னை 600 001; முருகன் ஆட்டோமேட்டிக்ஸ் காளியம்மன் கோயில் தெரு, உசிலம்பட்டி; ஓரியன்ட் எலெக்ட்ரிகல்ஸ், 170 நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் ரோடு, சென்னை 600 001; பழனியப்பா ட்ரேடிங் கோ, 2 ஹெட் க்வார்ட்டர்ஸ் ரோடு, கோயம்புத்தூர் 641 018.



# போடு புதிர்!



படத்தில் காட்டியபடி உங்களிடம் ஒரு காகிதம் கொடுக்கப்பட்டுள்ளது. அதை எல்லா அம்சங்களிலும் சமமான நான்கு துண்டுகளாக உங்களால் வெட்ட முடியுமா?

கொ. ச. ராதாகிருஷ்ணன்

**NO16 NO17 NO18**

மேற்படி மூன்று - இலக்கங்களில் ஒன்றில் ஒளிந்து கொண்டிருக்கிற மிருகம் என்ன?

எம். பி. துரைசாமி

(விடைகள்: 46-ம் பக்கம்)




# கல்கி

1976
நவம்பர் 14
நள ௵ ஐப்பசி 29


"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே சம்பவங்களும் கற்பனையே.

# அன்றும் இன்றும் சிலருக்கு அதே இளந்தளிர் மேனி!




கனிவான பியர்ஸ் சோப்பினால் காத்திடுவீர் உங்கள் மேனி மெருகை. மாணிக்கப் படிகம்போல் மிளிரும் ஒவ்வொரு வில்லையிலும் ஒரு நூற்றாண்டு கால சோப்-உற்பத்தி அனுபவம் உள்ளிறங்கியுள்ளது. பிஞ்சு மென்மை கொஞ்சும் பியர்ஸ் — தூய்மைக் கொழுந்து — கண்கூடாக நீங்கள் ஊடுருவிப் பார்க்கக்கூடிய உன்னதத் தூய்மை.

**பியர்ஸ் சருமக் களை...**
**கன்னிப் பருவக் களை**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

லின்டாஸ்-PS. 56-140 TH

# மோதிலால் முதல் சஞ்சய் வரை!

எங்கள் இதயங்களில் நீக்கமற நிறைந்திருக்கும் அருமைத் தலைவரே! நேருஜி!

தங்களது பிறந்த தினத்தன்று எங்களது கரம் கூப்பிய அஞ்சலிகளைச் சமர்ப்பிக்கிறோம்.

ஆசிய ஜோதி என்றும் மனித குல மாணிக்கம் என்றும் பாரத ரத்தினம் என்றும் பலவாறு போற்றிப் புகழப்பட்ட தங்களுடன் நாங்கள் கருத்து மாறுபாடு கொள்ளும் பெருமையும் உரிமையும் பெற்ற சந்தர்ப்பங்கள் பல உண்டு.

ஆனால் அவற்றை எண்ணிப் பார்க்கிற சமயம் அல்ல இது.

தாங்கள் பாரத புண்ணிய பூமிக்கு, அதில் வாழக் கொடுத்து வைத்துள்ள எங்களுக்கு ஆற்றிய அளப்பரிய சேவைகளை நினைத்துப் பார்த்து நன்றி கூற வேண்டிய தருணம்.

பஞ்ச சீலம் என்றும், ஜனநாயக சோஷலிஸம் என்றும், கூட்டு சேராக் கொள்கை என்றும் பல புதிய அரசியல் சித்தாந்தங்களைத் தாங்கள் பாரதத்துக்கு மட்டுமின்றி உலகுக்கே உருவாக்கித் தந்தீர்கள்.

அதற்கும் முன்பாகப் பாரதம் சுதந்திரம் பெற காந்திஜி நடத்திய அறப் போராட்டத்தில் அவருக்கு வலக் கரமாகத் திகழ்ந்து பார் புகழ் வெற்றி பெற்றீர்கள்.

சுதந்திர பாரதத்தின் முதல் பிரதம மந்திரியாக விளங்கி இந்தத் தேசத்தை உலக அரங்கில் உன்னத நிலைக்கு உயர்த்தினீர்கள்.

இன்னும் எவ்வளவோ அரிய, பெரிய சாதனைகள். பக்கம் பக்கமாக அல்ல, புத்தகம் புத்தகமாக எழுதக் கூடியவை. பாரதத்தின் எதிர்காலம் வளம் பெறத் தாங்கள் செய்த காரியங்கள் அனைத்திலும் சிறந்த ஒன்று, எங்களை அளப்பரிய பெருமிதமும் மகிழ்ச்சியும் கொள்ளச் செய்கிற ஒன்று என்ன தெரியுமா?

தங்களுக்கு ஒரு தகுந்த வாரிசை உருவாக்கித் தந்துவிட்டுப் போனீர்களே, அதுதான்! அதற்காகத் தங்களுக்கு எவ்வளவு நன்றி சொன்னாலும் போதாது! தங்களிடம் பல முறை கருத்து மாறுபாடு கொண்டதுபோலவே தங்கள் மகளும் இன்றைய பாரதப் பிரதமருமான இந்திராஜியிடமும் நாங்கள் பல சந்தர்ப்பங்களில் கொள்கை அளவில் வேறுபட்டு நின்றதுண்டு. இனியும் அத்தகைய கௌரவம் எங்களுக்குக் கிடைக்கும். ஆனால் அவையெல்லாம் இந்திரா அவர்களிடம் நாங்கள் கொண்டிருக்கும் அளப்பரிய மதிப்புக்கும் மரியாதைக்கும் குறுக்கே நின்றதில்லை; அவரது சாதனைகளைக் குறைத்து மதிப்பிடத் தூண்டுதல் அளித்ததில்லை.

தங்களைப் போலவே தங்களது வாரிசும் இத்தேசத்துக்கு ஆற்றியுள்ள நற்பணிகளை எண்ணிப் பார்த்து நன்றி கூற இதனை ஒரு சந்தர்ப்பமாகக் கருதி மகிழ்கிறோம்.

குறிப்பாக, ஏதோ நடக்கட்டும், எப்படியோ போகட்டும் என்று ஒரு மிதப்பு நிலையில் இருந்த தேசப் பொருளாதாரத்தை எதிர் நீச்சுப் போடவைத்தது தங்கள் அருமை மகளின் அரிய சாதனைகளுள் ஒன்று. 'உம்' என்றால் போராட்டம், 'ஆ' என்றால் இயக்கம், 'ச்சூ' என்றால் வேலைநிறுத்தம் என்றிருந்த நிலையை மாற்றி, தேசத்தில் தொழில் துறையிலும், அரசியல் ரீதியாகவும் பூரண அமைதி நிலவச் செய்திருக்கிறார் உங்கள் பிரியதரிசினி.

தேச பக்தி என்பது அரசியல் மேடையில் அல்ல, கடின உழைப்பில் இருக்கிறது என்பதை ஒவ்வொரு இந்தியனும் இன்று புரிந்து கொண்டிருக்கிறான்.

ராஜாஜியிடம் பயின்ற சி. எஸ். அவர்களை நிதி மந்திரியாக்கி, சுருசுருப்பு மிக்க டி. ஏ. பாய் அவர்களைத் தொழிலமைச்சராக்கி, யதார்த்த ரீதியில் பொருளாதார — தொழில் துறைக் கொள்கைகளை வகுக்கச் செய்துள்ளார் தங்கள் புதல்வி — எங்கள் தலைவி. ''அரசாங்கத்துக்கு வருமானத்தை அதிகரிப்பதுதான் வரி விதிப்பதன் நோக்கம் என்ற கொள்கை பத்தாம் பசலியானது, அதனை நாங்கள் கைவிட்டாயிற்று; வரி விதிப்பது வளர்ச்சிக்கு உதவும் வகையில் அமைய வேண்டும்'' என்று சி. எஸ். கூறுகிறார். திரு டி. ஏ. பாய் அவர்களோ, ''தொழிற் துறை வளர்ச்சித்

கல்கி மலர் 36 இதழ் 16



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற — எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

திட்டம் வேலை வாய்ப்புக்களை அதிகரிக்கும் அடிப்படையிலேயே அமைய வேண்டும்'' என்று சொல்கிறார். இப்படிப் பேசுவதன் மூலம் இந்திராஜி தங்களிடம் வைத்துள்ள நம்பிக்கை வீண் போகாது என்று இருவரும் காண்பித்துக் கொண்டிருக்கிறார்கள்.

ஏழை மக்கள் துயர் நீரவும் வாழ்க்கைத் தரம் உயரவும் அவர்கள் தங்களுக்குத் தாங்களே உதவிக் கொள்ள வேண்டும். இதற்கு அனுசரணையாக அரசு சில திட்டங்களை வகுத்துத் தர வேண்டும். இதுதான் இந்திராஜி வகுத்துள்ள இருபது அம்சத் திட்டத்தின் சாரம் எனலாம்.

இவை எல்லாவற்றையும்விட பிரமாதமான ஒரு காரியத்தைச் செய்திருக்கிறார், எங்கள் பிரதமர் — உங்கள் செல்வக் குமாரி. கடமை, கண்ணியம், கட்டுப்பாடு ஆகியவற்றைக் காற்றிலே பறக்கவிட்டு லஞ்ச ஊழல் மோசடிகள் உயர் மட்டத்திலிருந்து அடித்தளம் வரை பயங்கரத் தொத்து நோயாகப் பரவ இடமளித்த ஓர் ஆட்சிக்குத் தமிழகத்தில் முடிவு காண்பதில் உறுதி காட்டி, அச்சமின்றி இயங்கினரே அதற்காகத் தமிழகம் ஏழேழு தலைமுறைக்கும் அவருக்கு நன்றிக் கடன்பட்டிருக்கிறது.

அருமை நேருஜி! மோதிலாலிலிருந்து தொடங்கினல் தங்கள் குடும்பத்தின் நான்காவது தலைமுறையும் இன்று முன்னணிக்கு வந்து மக்களின் பேராதரவைப் பெற்றுள்ளது என்பது எங்களுக்குப் பெருவகை அளிக்கிறது.

சஞ்சய் அவர்களிடம் தங்களிடம் இருந்தது போன்றே பல உயர் குணங்கள் அதே அச்சாக அமைந்திருக்கக் கண்டு நாங்கள் வியக்கவில்லை, விம்மிதமடைகிறோம்!

சதா உயர் மட்டத்திலேயே இராமல் சாமானியரில் ஒருவராகவும் விளங்கத் தாங்கள் ஆசைப்படுவீர்கள். காரைவிட்டு இறங்கி உங்களைக் கண்ணே போல் போற்றிய மக்களின் மத்திக்கு ஓடுவீர்கள்; அவர்களுடன் ஆடிப் பாடி மகிழ்வீர்கள்.

உங்கள் பேரன் சஞ்சய் அப்படியேதான் நடந்து கொள்கிறார்! ஏழை பாழைகளுக்கென்று புதிதாக அமைக்கப்பட்ட குடில்களுக்குள் ஒரு பெட்ரோமாக்ஸ் விளக்கைத் தாமே எடுத்துக் கொண்டு நுழைந்துவிடுகிறார்! ''இந்த வீட்டில் யார் வசிக்கப் போகிறார்கள்?'' என்று கேட்டு அவர்களுடன் அளவளாவ ஆசைப்படுகிறார். அது இன்னும் தீர்மானமாகவில்லை என்று அறியும்போது உங்களைப் போலவே அவருக்கு மூக்குக்கு மேல் கோபம் வருகிறது!

வேறு ஓர் இடத்தில், ''இத்தனை சிறிய செடி நட இத்தனை பெரிய குழியா?'' என்று கேட்கிறார். வனமகோத்சவம் நடத்தும் அதிகாரிகள் வறட்டுக் கௌரவம் பாராமல் தங்கள் கரங்களாலேயே குழியில் மண் சரிக்கிறார்கள்!

காங்கிரஸுக்காகக் கண்ட கண்டவர்கள் எல்லாம் நிதி திரட்டக் கூடாது என்று கண்டிப்புக் காட்டுகிறார். ''பணம் வேண்டாம், செக் கொடுங்கள்'' என்று எச்சரிக்கிறார். செல்லுமிடமெல்லாம் குடும்பக் கட்டுப்பாடு குறித்தும் வரதட்சிணைக் கொடுமை பற்றியும் மக்களுக்கு எடுத்துரைக்கிறார். உற்பத்தி உயர்வுடன் போனஸ் இணைக்கப்பட வேண்டியதன் அவசியத்தைத் தொழிலாளர் பெருமக்களுக்கு விளக்குகிறார்.

இவரிடமும் சில அம்சங்களில் நமக்குக் கருத்து மாறுபாடு உண்டு. ஆனல் அவற்றை விமர்சிக்க வேண்டியது உங்கள் பிறந்த தினத்தன்று அல்ல.

அருமை நேருஜி! தாங்கள் இந்தப் புனித பாரதத்தை எப்படி உயிரினும் மேலாக நேசித்தீர்கள் என்பது எங்களுக்குத் தெரியும். அந்த கைய ஒரு தேச பக்தி வெறியாக, தீயாக எங்கள் உள்ளங்களில் வளரட்டும். கடமை உணர்வு அத்தீயின் உக்கிரத்தைத் தணிக்கட்டும்; கடின உழைப்பு அந்த வெறிக்கு வடிகாலாகட்டும். உங்கள் வாரிசுகள் எங்களுக்கு நல்வழி காட்ட இறையருள் கூட்டட்டும். பாருக்குள்ளே உயர் நாடாகப் பாரதம் மேன்மை அடையட்டும்!

எங்கள் இதயங்களில் 'வாழும் நேருஜி! உங்களுக்குப் பிறந்த நாள் வாழ்த்துக்கள்!

# விதேசி மோகம் வளரட்டும்!

**வி**தேசி மோகம் கூடாதாம்! சுதேசிப் பற்று வளர்க்கப் பிரசாரத்துக்கு நாள் குறித்திருக்கிறது அரசு.

விதேசி மோகம் தவறு? நாம் ஒத்துக் கொள்ளவில்லை!

டாலரும் ஸ்டெர்லிங்கும் விதேசி நாணயங்கள். அவற்றின் மீது மாரு காதல் கொள்வோம்!

மேற்கத்திய நாடுகளில் நமது உற்பத்திப் பண்டங்களை வாங்க வேண்டியவர்கள் தனியார்துறை வர்த்தகர்கள். அவர்கள் மீது மோகம் கொள்வோம். அவர்களை மகிழ்விக்கப் பெருமுயற்சி செய்வோம்.

நமது தேசத்துக்கு ஏராளமான அயல் நாட்டுச் சுற்றுலாப் பயணிகள் வரவேண்டும். அளப்பரிய அன்பு கொண்டு அவர்களை வரவேற்போம்!

அயல்நாட்டில் ஏற்பட்டுள்ள நுணுக்கமான நவீன தொழில்துறை முன்னேற்றங்கள், வளர்ந்துள்ள விஞ்ஞான அறிவு இவற்றை நாமும் அடைந்தாக வேண்டும். இந்த விதேசி அம்சங்கள் மீது கொள்ளை ஆசை வைப்போம்.

நமது தொழில்துறைகளில் அயல்நாட்டு முதலீடு அவசியத் தேவை. அதில் நமது மட்டற்ற விருப்பத்தைக் காட்டுவோம்.

ஆங்கிலம் அந்நிய மொழிதான். ஆனல் துரித முன்னேற்றத்துக்கு நமக்குப் பெரிதும் உதவக்கூடிய மொழி. அதன் மீது அன்பைப் பொழிவோம்.

இப்படியெல்லாம் அவசியமான இனங்களில் விதேசி மோகத்தை வளர்த்துக் கொள்வோம். அவசியமற்ற இனங்களில் விதேசி மோகத்தைக் குழி வெட்டிப் புதைப்போம்!

# ஜீவகாருண்யம்

ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள்

29



தர்மத்தை நமக்கெல்லாம் நடத்திக் காட்ட வந்த ஸ்ரீராமசந்திரமூர்த்தியே இந்தப் பிரேத ஸம்ஸ்காரத்தை விசேஷமாகச் செய்து காட்டியிருக்கிறார். ஜடாயு மாதிரியான ஒரு பக்ஷிக்குக் கூட அவரே ஸம்ஸ்காரம் செய்திருக்கிறார். அதுமட்டுமில்லை. வாலியையும், பரம வைரியான ராவணனையும் கூட அவர் வதைத்தவுடன் அங்கதனையும், விபீஷணனையும் கொண்டு அவர்களுக்கு ஒரு குறைவுமில்லாமல் தகனம் பண்ணச் செய்திருக்கிறார். ஏனென்றால் அந்த சரீரங்களுக்குள் இருந்த மனசுதான் அவற்றைத் துஷ்டத்தனமாக நடத்திற்று. அப்புறம், சுயமாகக் கெடுதல் இல்லாத, பகவானின் அற்புத சிருஷ்டியான அந்த துஷ்டர்களின் உடம்புக்கும் உரிய மரியாதையைச் செய்வதில் ராமரே கண்ணுங் கருத்துமாக இருந்து, யதோக்தமாக ஸம்ஸ்காரம் பண்ணுவித்திருக்கிறார்.

ஆகையால், அநாதைப் பிரேத ஸம்ஸ்கார விஷயத்தில் கவனக் குறைவாக இருப்பது நம்முடைய ஹிந்து சமூகத்துக்கு உள்ள பெரிய தோஷம் — மன்னிக்க முடியாத தோஷம். இனிமேலாவது இதற்கு ஓர் ஏற்பாடு பண்ணிப் பிராயச் சித்தம் பண்ணிக் கொள்ள வேண்டும்.

அநாதையாக ஒருவன் செத்துப் போனதாகத் தெரிந்தால், அவன் என்ன ஜாதியாக இருந்தாலும், தீண்டாதவனாக இருந்தாலும், அவனுடைய குலாசாரப்படி அவனுடைய குலத்தைச் சேர்ந்தவர்களைக் கொண்டு, யதோக்தமாக ஸம்ஸ்காரம் செய்வதற்குப் பொருளுதவி பண்ண வேண்டும். இதற்காகப் பலர் சேர்ந்து பணம் போட்டு மனசாரப் பணி புரிய வேண்டும். ஏகதேசமாகச் செய்யச் சக்தியுள்ள தனிகர்களும் இதைப் பெரிய தர்மம் என்று தெரிந்து கொண்டு உதவி செய்ய வேண்டும். அநேக தர்ம ஸ்தாபனங்கள், டிரஸ்டுகள் நம் ஹிந்து சமூகத்தாரால் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. அவர்களும் அநாதைப் பிரேத சம்ஸ்காரம் பரம உத்தமமான கைங்கரியம் என்று புரிந்துகொண்டு, இதற்காக உதவி கேட்டு வருபவர்களுக்குத் தாராளமாகப் பொருளுதவி செய்ய வேண்டும்.

லோகத்தில் சிலபேர் ஏன் ரொம்பக் கஷ்டப்படுகிறார்கள் என்றால், மற்றவர்கள் அவர்களுக்குப் பரோபகாரம் செய்கிறார்களா என்று பார்ப்பதற்காகத்தான் ஈச்வரன் இப்படிப் பரீட்சை பண்ணுகிறான் என்று சொல்வதுண்டு. அவனவன் தன் கர்மாவுக்காகக் கஷ்டப்படுகிறான்; நாம் உதவி பண்ணினாலும் கூட அவன் பலன் அடைய முடியாதபடி கர்மா குறுக்கே நிற்கலாம் — என்பதும் வாஸ்தவம்தான். ஆனால், நம் உபகாரத்தால் அவன் கர்மா தீருகிறதோ, தீரவில்லையோ, நம்மாலான பிரயாசையை நாம் பண்ணுவதுதான் மனுஷ்ய தர்மம். ஒருத்தனைக் கர்மாவுக்காகத் தண்டிக்கிறபோதே ஈச்வரன் மற்றவர்களுடைய பரோபகார சித்தத்துக்கும் அதை ஒரு 'டெஸ்ட்'டாக வைக்கிறான் என்றுதான் நாமும் எடுத்துக் கொள்ள வேண்டும். நாம் உபகாரம் பண்ணியும் அது அவனுக்குப் பிரயோஜனமாகாவிட்டால்தான், கஷ்டம் என்பது அவன் கர்மாவுக்குத் தண்டனை என்று சொல்லலாம். அநேக சமயங்களில் பரோபகாரத்தினால் பிறத்தியார் கஷ்டத்தைப் போக்கவும் முடிகிறதே! இப்படியானால் என்ன அர்த்தம்? நம்முடைய பரோபகார தர்மத்தால் அவன் கஷ்டம் போகிறதா என்று பகவான் 'டெஸ்ட்' பண்ணியதாகத்தானே அர்த்தம்?

ஒருத்தனுடைய கஷ்டத்தில் இப்படி இன்னொருத்தனுக்கு டெஸ்ட் இருக்கிறது. அதிலே பாஸ் பண்ணினால் ப்ரைஸ் (Prize) கிடைக்கும். சிலபேர் ரொம்பவும் பரிதாபகரமாக, கேட்பார் யாருமின்றி அநாதையாகச் சாவதி

---

[1932ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது]

லேயே மற்றவர்களுக்கு ஒரு பரீட்சை வைக்கிறான் பகவான். 'இவர்கள் தன்னால் படைக்கப்பட்ட அந்த அற்புதமான சரீர மெஷினை அதற்குள்ள மரியாதை கொடுத்து, சம்ஸ்காரம் பண்ணித் தன்னிடம் சேர்க்கிறார்களா?' என்று பரமேச்வரன் பார்க்கிறான். இந்தப் பரீட்சையில் பாஸ் பண்ணினால் ப்ரைஸ் தருகிறார். என்ன ப்ரைஸ்?

அநாதப்ரேத ஸம்ஸ்காராத்
அச்வமேத பலம் லபேத்

ஓர் அச்வமேதம் பண்ணினால் எவ்வளவு புண்ணியமோ அவ்வளவு புண்ணியத்தை ப்ரைஸாகக் கொடுத்து விடுகிறார்.

நமக்கு வேண்டிய பெரிய ப்ரைஸ் ஸாக்ஷாத் அம்பாளின் அநுக்கிரகம்தான். புண்ணிய பலனாக தேவலோகத்துக்கோ பிரம்ம லோகத்துக்கோ போய் நமக்கு ஒன்றும் ஆகவேண்டாம். அங்கெல்லாம் போனாலும் புண்ணியம் தீர்ந்த பின் — ரூபாய் செலவழிகிற மாதிரி செலவழிந்த பின் — பூலோகத்துக்குத் திரும்பி வந்துதான் ஆகவேண்டும். ஆனால் அம்பாளின் சரணாரவிந்தங்களுக்குப் போனோமானால் திரும்பவே வேண்டாம். நித்யானந்தம் என்ற சாச்வத சௌக்கியம் அதுதான்.

அந்த அம்பாள் எப்படி இருக்கிறாள்? ''ஹயமேத ஸமர்ச்சிதா'' வாக இருக்கிறாள்.

அதாவது அச்வமேதம் செய்தால் அதையே தனக்குப் பெரிய ஆராதனையாக எடுத்துக் கொண்டு அநுக்கிரகம் பண்ணுகிறவளாக இருக்கிறாள். நமக்குத்தான் சுலபமான அச்வமேதமாக அநாதப்ரேத சம்ஸ்காரம் இருக்கிறதே. இதனால் கிடைக்கிற பலனை அம்பாளின் அநுக்கிரகமாக எக்ஸ்சேஞ்ச் பண்ணிக் கொண்டால் அது ஒருநாளும் செலவழியாத புண்ணிய கரன்ஸியாக இருந்துகொண்டு, நம்மை இந்த லோகத்துக்கு மறுபடியும் அனுப்பாமல் காப்பாற்றும். ஒருத்தனுக்குச் செய்கிற மரண ஸம்ஸ்காரமே நம்மை ஜனன மரணங்களிலிருந்து விடுவிக்கக் கைகொடுக்கும்.

ஆனதால், அநாத ப்ரேத ஸம்ஸ்காரத்தில் நாம் அலட்சியமாக இருக்கிறோம் என்றால் நாம் அசடு என்று அர்த்தம். பரமாத்மா ரொம்ப சுலபமாக ஒரு பரீட்சை வைத்து அச்வமேத பலனை, அம்பாளின் பிரீதியை நாம் அடைவோமா என்று பார்க்கிறபோது, நாம் இதைக் கோட்டை விட்டு விட்டு நின்றால் அசடு என்றுதானே ஆகும்?

ஆகையால் எந்த ஜாதியானாலும் அநாதைப் பிரேதங்களைப் பற்றி நமக்குத் தெரிய வந்தால், ''இந்தக் கைங்கரியம் நமக்குக் கிடைத்ததே!'' என்று அதற்குரிய ஸம்ஸ்காரத்தைப் பண்ணுவித்து, ஒரு பெரிய அச்வமேத யாக பலனை அடையும் சந்தர்ப்பத்தைப் பிரயோஜனப்படுத்திக் கொள்ள வேண்டும்.

இனிமேல், ஒரு ஹிந்துப் பிரேதத்தை ராஜாங்க சேவகர்கள் ஒரு சடங்குமில்லாமல் புதைத்தார்கள் என்ற அபக்கியாதி நமக்கு இருக்கக் கூடாது. செத்துப்போன உடம்புக்கு என்ன முக்கியம் என்றில்லாமல், இந்த ஸம்ஸ்காரமே எல்லாப் பரோபகாரத்துக்கும் அஸ்திவாரம் என்ற உணர்வோடு இதிலே அக்கறை காட்ட வேண்டும்.

''ஹயமேத ஸமர்ச்சிதா'' என்று 'த்ரிசதி'யில் அம்பாளுக்குப் பெயர் இருப்பது போல் 'ஸஹஸ்ர நாம'த்தில் ''வர்ணாச்ரம விதாயினீ'' என்று ஒரு பேர் இருக்கிறது. இதன்படி அந்தந்த ஜீவனின் குல தர்மப்படி அதன் சரீரம் ஸம்ஸ்காரம் ஆகும்படி செய்தாலே அம்பாளின் பிரீதிக்குப் பாத்திரமாவோம். ஸ்ரீ மாதாவின் க்ருபையால் அவளுடைய குழந்தைகளான எல்லா ஜாதி, வர்ண, குல, ஆச்ரமங்களைச் சேர்ந்த ஜீவகோடிகள் எல்லோருக்கும் பரஸ்பரம் உண்மையான சகோதர மனப்பான்மை ஏற்பட்டு அதன் மூலம் உலகத்தில் அன்பும், பொருளும், அருளும் குறையாது வளர வேண்டும். (தொடரும்)


ரொம்பவும் சிரிச்சுட்டேனே?
தேர்தல் வாக்குறுதிகள்
கார்ட்டருக்கே ஓட்டு போடுங்கள்!


எதுக்கும் கையோடு இருக்கட்டும்னு அஞ்சாவது படத்தையும் கொண்டு வந்திருக்கேன்
அஞ்சா இளைஞர் - கழகத்துக்கு மட்டும் தலைவர் அல்ல - அனைவருக்கும் தலைவர்! —
அரசு அலுவலகங்களை தலைவர்களின் படங்கள் அலங்கரிக்க வேண்டும்!
— டில்லி உத்தரவு


சர்க்காரியா வழக்கு நிதிக்கு அள்ளிக் கொடுத்த வள்ளலே! உடன் பிறப்பே! சி.பி.ஐ வழக்கு நிதி தொடங்கலாமா? உன் கருத்து என்ன?
சர்க்காரியா வழக்கு நிதி இதுவரை வசூல் ரூ.79000/-

மங்கல மங்கையர் குங்குமத் திலகம்
மாதிளம் கன்ன மாதுளம் முத்து
மணநாள் மகிழ்வில் நாணும் கன்னம்
மலர்ந்து சிரிக்கும் ரோஜா மலர்கள்
போதை விழிகள், மாலை ஆதவன்
கோவ்வைச் சேவ்வாய், கோமளத் தாமரை
எரிதழல், விரிசடைத் தேவனின் நெற்றிப் பிழம்பு
வைகறைத் துயிலெழும் சேவலின் கோண்டை
மண்ணைக் காக்கச் சிந்தும் குருதி
நாணம்
தீரம்
ஆங்காரம்






**நெரோலாக்**

சிவப்பு வண்ணத்தின் பல்வேறு சாயல்கள்

UNL-80

# ஹேலோ ஷாம்பூகள்–உங்கள் கேசத்தின் பராமரிப்பிற்கெனவே...

## உங்கள் கேசம் கட்டுக்கோப்புடன் வளமோங்கித் திகழவே, உபயோகிப்பீர் புரதம் நிறைந்த ஹேலோ எக் ஷாம்பூ

விசேஷ போஷாக்கு மிக்க ஹேலோ எக் ஷாம்பூவின் வளமிக்க முட்டைப் புரதத்தின் பயனாக, உங்கள் தலையின் மேல் தசைகளும், கேசமும் வலுப்பெறுகின்றன. கேசம் இயற்கைப் பளபளப்புடன் வளமோங்கித் திகழ்கிறது.






HSR.G.3 TH

**இயற்கை ஆரோக்கியத்துடன் கூடிய கேசத்திற்கு —ஹேலோ கேசப் பராமரிப்பு!**

**ஹேலோ காஸ்மெடிக் ஷாம்பூ:** இந்த விசேஷ உத்தியின்படி தயாரிக்கப்பட்ட ஷாம்பூவை உபயோகித்து, உங்கள் கேசம் எவ்வளவு மெத்தென்றும், மிருதுவாகவும் இருக்கக் கூடும் என்பதைக் கண்டு கொள்ளுங்கள்.

**ஹேலோ லெமன் ஃப்ரெஷ் ஷாம்பூ:** உங்கள் கேசத்திற்கு இயற்கையான, தூய்மையான பளபளப்பைத் தருகிறது.

**ஹேலோ கான்சென்ட்ரேட் ஷாம்பூ:** ஏராளமான நுரைவளத்தின் மூலம் உங்கள் கேசத்தை மென்மையாகவும், கட்டுக்கடங்கியும் வைத்திருக்க சிறிதளவே போதும்.




**ஹேலோ ஷாம்பூகள் மட்டுமே சீரான, சிறந்த உத்தியின்படி தயாரிக்கப்படுகின்றன.**





□ ஜார்ஜியா மாநில ஆளுனராகப் பதவிப்பிரமாணம் ஏற்கிறார் கார்ட்டர்.



□ திருமணத் தினத்தன்று.

நியூயார்க்கில் மிக ஆடம்பரமான ஹோட்டல். அதில் ஜனநாயகக் கட்சியின் தேசிய மகாநாட்டுப் பிரதிநிதிகளுக்கு விருந்து. அங்கே மதுபானத்துடன் கொரிக்க உப்பு பிஸ்கட்டுகளுக்குப் பதில் நிலக் கடலை வழங்கப் பட்டது! அதுவும் உரிக்காத வேர்க்கடலை! பிரதிநிதிகள் டொக் டொக்கென்று கடலை உரித்துச் சந்தோஷமாகச் சாப்பிட்டார்கள். இதற்குக் காரணம் இல்லாமல் போகவில்லை. இளைஞனாயிருந்த போது நிலக் கடலை பயிரிட்

# கார்ட்டரைக் காண்போம்!



□ வேர்க்கடலை விவசாயி.

டுச் சம்பாதித்த ஜிம்மி கார்ட்டர் இன்று அமெரிக்க நாட்டின் ஜனாதிபதி. அமெரிக்காவில் இது அதிசயமொன்றுமில்லை. விறகுவெட்டி தானே உலகம் போற்றும் ஜனாதிபதி லிங்கனாக உயர்ந்தார்!

ஜார்ஜியா மாநிலத்தில் கொலம்பஸுக்கும் சவன்னாவுக்கும் இடையில் செல்லும் மண் ரஸ்தாவில் ஒரு சிறு வீடு. ஏர்ள் கார்ட்டர் ஜார்ஜியாவில் விவசாயி. சிறு ஸ்டோர் வியாபாரி. ஏர்ள் தமது முப்பதாவது வயதில் பெற்றெடுத்த செல்வம் ஜிம்மி கார்ட்டர்.

ஏர்ள் கார்ட்டர் மிகக் கண்டிப்பான பேர்வழி. இளம் கார்ட்டர் சிறு தவறுகள் இழைத்தாலும் அவனுக்குப் பிரம்படி கிட்டும். நான்கு வயதிலிருந்து பதினைந்து வயதுக்குள் இளம் கார்ட்டர் பெற்ற பிரம்படித் தண்டனை ஆறு!

கிறிஸ்துமஸ் அல்லது பிறந்த நாள் பரிசு என்ன வேண்டும் என்று பெரியவர்கள் கேட்டால் இளம் ஜிம்மியின் பதில்: ''புத்தகங்கள்!'' ஜிம்மியின் நாலாவது வயதிலேயே அவருக்கு மாபசான் நூல்கள் பரிசாகக் கிடைத்தன. அவற்றை அப்போது படிக்க முடியாது போனாலும் அவற்றைப் பொன்னே போல் பாதுகாத்துப் பல வருஷங்கள் கழித்துப் படித்து மகிழ்ந்தான் ஜிம்மி.

பள்ளி மாணவன் ஜிம்மியின் வாழ்க்கையில் பெருமிதத்துக்குரிய நேரம் அவனுக்குப் பள்ளியில் வெள்ளை கான்வாஸ் பெல்டும், ஒரு தகர பாட்ஜும் கொடுக்கப்பட்ட போது தான். பள்ளிக்கூடப் போலீஸ்காரராகப் பதவிப் பிரமாணம் எடுத்துக் கொண்டான்! மாணவர்கள் விபத்துக்களில் மாட்டிக்



உபஜனாதிபதி மாண்டேல்

கொள்ளாதிருக்கத் தேவைப்படும் எல்லா முன்னெச்சரிக்கை நடவடிக்கைகளையும் அவன் அமுல்படுத்த வேண்டும். மழைக் காலத்தில் பள்ளிக்கூட பஸ் சகதியில் மாட்டிக் கொண்டு அவதிப்படும். அதனைத் தள்ளிச் சகதியி லிருந்து மீட்க உதவிக்கு ஆள் பிடித்து வர வேண்டும்!

ஜிம்மி கார்ட்டரின் விளையாட்டுத் தோழர்கள் பெரும்பாலோர் கறுப்பு நிறத்த வர் என்பது குறிப்பிடத்தக்கது. நிற பேதம் சிறிதும் மனத்தில் இடம் பெறாமல் வளர்ந் தார். ஜிம்மிக்குச் சங்கீதம், கலை, இலக்கியம் ஆகியவற்றில் மிகுந்த ஈடுபாட்டை வளர்த்த வள் மிஸ் ஜூலியா கோல்மன். டென்னிஸில் ஜிம்மி தன்னைவிட வயதான பள்ளித் தோழர் களைக்கூடத் தோற்கடிக்கும் வல்லமை பெற் றிருந்தாலும் தந்தை ஏர்லிடம் ஆடும்போது எப்பொழுதும் தோல்விதான் அவனுக்குக் கிடைத்தது!

ஒரு தடவை ஜிம்மி ஞாயிற்றுக்கிழமை மத போதனை வகுப்புக்காகச் சென்ற பொழுது தந்தை ஏர்ல் ஒரு நாணயத்தைக் காணிக்கை செலுத்தத் தந்தார். அவன் போய்விட்டு வந்து உடைகளைக் கழற்றுமுன் பாக்கெட்டு களைக் காலி செய்து பொருள்களை மேஜைமேல் வைத்தான். இரண்டு நாணயங்கள் இருந் தன. தகப்பனாருக்குச் சொல்லி முடியாத கோபம் வந்தது! சிறுவன் ஜிம்மி காணிக்கை செலுத்துவதற்குப் பதில் தட்டிலிருந்து ஒரு நாணயத்தைத் 'தட்டி' வந்திருந்தான்! அன்று ஜிம்மிக்குக் கடுமையான பிரம்படிப் 'பரிசு' கிடைத்தது! 'அதுதான் நான் செய்த முதல் திருட்டு, கடைசித் திருட்டும் அது தான்' என்கிறார் கார்ட்டர்.

சிறு வயதிலேயே ஜிம்மிக்குக் கடுமையாக உழைக்கும் பழக்கம் ஏற்பட்டிருந்தது. பண்ணையில் உழைத்ததோடு அதில் கிடைத்த நிலக் கடலையை அருகிலுள்ள ப்ளெய்ன்ஸ் என்ற நகரின் தெருக்களில் விலைக்கு விற்றுச் சம்பாதித்தான் ஜிம்மி!

ஜிம்மி கார்ட்டரின் வாழ்வில் பெரும் பகுதி ராணுவப் பணியில் கழிந்தது. அவரது மாமா அமெரிக்கக் கடற்படையில் பணி புரிந்து ஜிம்மியின் 'ஹீரோ'வாக விளங் கினார். கல்லூரிப் படிப்புக்குப் பெற்றோரின் உதவியை எதிர்பார்க்க முடியாது என்று புரிந்தது. எனவே, அன்னபொலிஸ் நகரில் இருந்த கடற்படைக் கல்லூரியில் சேர முடிவு செய்தார் ஜிம்மி. இதன் மூலம் அதிகச் செல வின்றிப் பொதுக்கல்வியும் கிடைத்தது; கடற் படைப் பயிற்சியும் அதையொட்டிய உயர் கல்வியும் கிடைத்தது. கடற் படையின் விமானம் ஓட்டும் வல்லமையும் பெற்றார்.

'யு. எஸ். எஸ். பாம் ஃப்ரெட்' என்ற நீர் மூழ்கிக் கப்பலில் ஜிம்மி பணி புரியும் பொழுது சரித்திரத்திலேயே கண்டிராத அளவில் பசிபிக் கடலில் பெரும் புயல் உருவா யிற்று. அப்போது நீர்மூழ்கிக் கப்பல் கடல் ஆழத்திலிருந்து வெளிப்பட்டு அலைகள் மீது மிதந்து கொண்டிருந்தது. ஏதோ காரிய மாக அதன் மேல் தளத்தில் ஜிம்மி இருந் தான். அந்த வேளையில் திடும்மென பெரும் புயல் எழுந்தது! இரும்புக் குழாயைப் பிடித் துக்கொண்டு ஜிம்மி கடும் அலைகள் மோத அல்லாடினார்! ஆறடி உயரத்துக்கு ஒரு பெரிய அலை எழும்பியபொழுது பிடி தளர்ந்து விட்டது. எப்படியோ நீச்சலடித்துப் பிழைத்து வந்தார் ஜிம்மி. அன்று அவர் பிழைத்தது 'புனர் ஜென்மம்'தான்.

ஜிம்மி கார்ட்டருக்கும் ரோஸலேனுக்கும் ஏற்பட்ட சந்திப்பு அவரது சகோதரி மூல மாகத்தான். பெண்கள் இருவரும் தோழிகள். ரோஸலேன் அடிக்கடி ரூத்தைப் பார்க்க அவர் வீட்டுக்கு வருவார். ஆனால் ஜிம்மி அவளை அவ்வளவாகப் பொருட்படுத்தியதில்லை. ஒரு நாள் சினிமாவுக்கு இருவரும் சென்று வந் தார்கள். அவ்வளவுதான், ஜிம்மிக்கு அவளை ரொம்பப் பிடித்துப் போயிற்று. 'இவளைத் தான் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும்'



ஒரு வயதுக் குழந்தை கார்ட்டர்

"கவிமாமணி"

இருபத்தைந்து ஆண்டுகளாகச் சென்னையில், பாரதி அன்பர் திரு சுராஜ் அவர்கள் முயற்சியால் இலக்கியப் பணி புரிந்து வரும் பாரதி கலைக் கழகம், வெள்ளி விழா வைபவத்தின் போது கவிதைத் துறையில் நா. சீ. வரதராஜன் (பீஷ்மன்) பணியைப் பாராட்டி, 'கவிமாமணி' எனும் பட்டமளித்துக் கௌரவித்தது. விழாவுக்குத் திரு நாரணதுரைக் கண்ணன் தலைமை வகித்தார். ஓய்வுபெற்ற நீதிபதி திரு கிருஷ்ணசாமி ரெட்டியார் அவர்கள் பட்டம் வழங்கி, பீஷ்மனுக்குப் பொன்னாடை அணிவித்தார்.



என்று தீர்மானித்துவிட்டார். ரோஸலின் இவரது காதலுக்கு, முதலில் 'இல்லை'ப் பாட்டுத்தான் பாடினாள். வாஷிங்டன் பிறந்த நாள் அன்று ரோஸலின் மனம் மாறியது! அன்று ஜிம்மியை மணக்க இசைந்தாள். வாஷிங்டன் பிறந்த நாளன்று இணைந்த 'ஜோடி' இன்று வெள்ளை மாளிகையில் ஒரு நல்ல நாளன்று 'குடி' போகிறது.

தகப்பனார் காலமான பிறகு கடற்படை உத்தியோகத்தை 'ராஜினாமா' செய்துவிட்டுச் சொந்த ஊர் திரும்ப விரும்பினார் ஜிம்மி. இதற்குக் கடும் எதிர்ப்புத் தெரிவித்தாள் ரோஸலின்! சொந்த ஊர் திரும்பினால் உறவினர்கள், அன்னைமார்கள் கெடுபிடிகளில் மாட்டிக் கொண்டு சுதந்திரம் பறிபோய் அவதிப்பட நேரும் என்பது ரோஸலின் வாதம்! ஜிம்மியின் பிடிவாதமே கடைசியில் வென்றது! இந்தத் திருப்பமே ஜிம்மியின் அரசியல் வாழ்வுக்கு அடிகோலியது. படிப்படியாகச் சமூகத்தில் அந்தஸ்து உயர்ந்து நாளடைவில் ஜார்ஜியாவின் கவர்னராக ஆவதற்கும் வழி பிறந்தது!

ஜார்ஜியா கவர்னராக ஆவதற்கு முன்னால் அமெரிக்காவில் இன்னமும் கல்வி அறிவு பெறாத முதியோர்கள் இருக்கிறார்களே, பள்ளிப் படிப்பைப் பாதியில் விட்டுவிடுகிற இளைஞர்கள் இருக்கிறார்களே என்று வருந்தி அறிக்கைவிட்டார் கார்ட்டர். இந்த நிலைமையை மாற்றி அமைக்க வேண்டும் என்றார். பிறவியிலேயே அறிவு வளர்ச்சி குன்றிய குழந்தைகளிடம் விசேஷ கவனம் செலுத்த நிலையங்கள் ஏற்பட வேண்டும் என்பதில் தீவிரம் காட்டினார். நிற வேற்றுமை இனி இங்கில்லை என்று அடித்துச் சொன்னார். இவையெல்லாம் அவருக்குப் பெரும் ஆதரவைத் தேடித் தந்தன.

கடவுள் நம்பிக்கை மிகுந்த ஜிம்மி கார்ட்டர் மாதா கோயில் அதிகாரியாகவும் பணிபுரிந்தவர். நர்ஸ் பணியில் தேர்ந்த ஜிம்மி கார்ட்டரின் அன்னை லில்லியன் இந்தியாவுக்கு வந்து இரு வருஷங்கள் சமாதானப் படை சேவகியாக இருந்திருக்கிறார்!

கணவர் மேற்கொண்ட எல்லாக் காரியங்களிலும் பக்கபலமாக நின்றார் மனைவி ரோஸலின். ஜாக், ஜெப்ரே, சிப், ஏமை ஆகிய நால்வரும் ஜிம்மி கார்ட்டரின் செல்வங்கள். அனைவரும் ஜனாதிபதி தேர்தல் ஆயத்தங்களில் முழுமனத்தோடு ஈடுபட்டு உதவினார்கள். அவர்களது மகிழ்ச்சிக்கு இன்று எல்லை ஏது?

தேர்தல் பிரசாரம் தீவிரமாக நடந்த சமயம் ஒரு நாள் கார்ட்டர் மிகவும் களைத்துப் போய்க் காணப்பட்டார். அப்போது விமானத்தில் அவருடன் பயணம் செய்து கொண்டிருந்த நண்பர் கேட்டார்: "ரொம்பக் களைப்பாக இருக்கிறதா?"

கார்ட்டர் கூறினார்: "ஆமாம், இன்று காலை ரொம்ப ரொம்பக் களைப்பாக இருந்தது. ஆனால் தூக்கமே வரவில்லை."

"ஏன்?"

"நானும் மற்ற மக்களைப் போல் நான் எப்படிப்பட்ட ஜனாதிபதியாக இருப்பேன் என்று யோசித்துக் கொண்டிருந்ததில் தூக்கம் பிடிக்கவில்லை!"

'தேர்தலின் முடிவு என்னவாகுமோ என்ற கவலையால் தூக்கம் வரவில்லை' என்று பதில் கூறவில்லை கார்ட்டர். அவர் பதிலில் தன்னம்பிக்கை தொனித்தது. அந்தத் தன்னம்பிக்கை வீண் போகவில்லை. — பி.எஸ்.எம்.

மேலட்டை வண்ணக் கார்ட்டூன்: உமாபதி

---



"பேப்பர் மசாலாவுக்கு மேலே என்னமோ உருண்டையா வெச்சிருக்கியே, என்னப்பா அது?"

"பேப்பர் வெயிட் சார்!"

– முத்து

# பார்த்திபன் கனவு

அத்தியாயம் 18

## சிவனடியார் கேட்ட வரம்

அமரர் கல்கி

ராணி மூர்ச்சித்து விழுந்ததும், சற்றுத் தூரத்தில் நின்ற தாதிமார் அலறிக் கொண்டு ஓடி வந்து அவளைச் சூழ்ந்தனர். சிவனடியார், "நில்லுங்கள்" என்று அவர்களைத் தடுத்து நிறுத்திவிட்டு, தமது கமண்டலத்திலிருந்து கொஞ்சம் தண்ணீர் எடுத்து அவளுடைய முகத்தில் தெளித்தார். உடனே மந்திர சக்தியால் எழுந்தது போல், அருள்மொழி கண் விழித்துச் சிவனடியாரைப் பார்த்தாள்.

"சுவாமி! எனக்கு என்ன நேர்ந்து விட்டது?" என்று மெலிவான குரலில் கேட்டாள்.

"உனக்கு ஒன்றுமே நேரவில்லை, அம்மா! உன் மகனைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தேன். அவனுக்கு ஒரு குறைவும் நேராது என்றும், நிச்சயம் திரும்பி வருவான் என்றும் சொன்னேன்" என்றார் சிவனடியார்.

அருள்மொழி சற்றுச் சிந்தனையில் ஆழ்ந்திருந்து விட்டு, "இல்லை; ஏதோ ரொம்பவும் வேதனை தரும் செய்தி ஒன்றைச் சொன்னீர்கள்!" என்றாள்.

"சக்கரவர்த்தியின் மகளை உன் மகன் பார்க்க நேர்ந்தது என்று கூறினேன். அந்தச் செய்தி உனக்குச் சந்தோஷம் அளிக்கும் என்று எண்ணினேன்...."

"ஆமாம்; நினைவு வருகிறது. ஆனால் அது சந்தோஷச் செய்தியா? சோழ நாட்டின் மிகப் பெரிய விரோதி யாரோ, என்னுடைய பதியின் மரணம் எந்தக் கொடிய சத்துருவினால் ஏற்பட்டதோ, இன்று நான் இவ்விதம் ஆதரவற்று அநாதையாக இருப்பதற்கு யார் காரணமோ அப்பேர்ப்பட்ட பகைவனுடைய மகளைப் பார்த்தா என் மகன் மயங்கிவிட்டான்? விக்கிரமன் உண்மையில் என் வயிற்றில் பிறந்த பிள்ளைதானா....?"

"கொஞ்சம் பொறு, அருள்மொழி! அவசரப்பட்டுச் சாபம் கொடுக்காதே!" என்று சிவனடியார் சிறிது கலக்கத்துடன் கூறினார். அவர் மகா புத்திமானாயிருந்தும் அருள்மொழி இவ்வாறு பொங்குவாள் என்பதை எதிர்பார்க்கவில்லையென்று தோன்றியது.

"இதோ பார், அம்மா! உன்னுடைய தீராத கோபத்துக்கு ஆளான நரசிம்மவர்மனுடைய மகள் அந்தப் பெண் என்பது உன் மகனுக்குத் தெரியாது. அவர்கள் ஒருவரையொருவர் அருகில் நெருங்கியதும் இல்லை; ஒரு வார்த்தை பேசியதும் இல்லை. தூரத்திலிருந்து ஒருவரையொருவர் பார்த்தது தான்! அவர்களுக்குக் கல்யாணமே நிச்சயமாகி விட்டது போல், நீ கலக்கம் அடைய வேண்டாம்!" என்றார் பெரியவர்.

"நல்ல வேளை; என் வயிற்றில் பாலை வார்த்தீர்கள். எங்கே இதுவும் அந்தப் பல்லவ சக்கரவர்த்தியின் சூழ்ச்சியோ என்று நினைத்தேன். சுவாமி! விக்கிரமன் எங்கேயாவது கண் காணாத தேசத்தில் உயிர் வாழ்ந்திருக்கட்டும்; பசிக்கு உணவு இல்லாமலும் தாகத்துக்குத் தண்ணீர் இல்லாமலும், கஷ்டப்பட்டாலும் படட்டும்! ஆனால் அவன் திரும்பி வரவும் வேண்டாம்; எங்கள் பரம விரோதியினுடைய மகளின் மாய வலையில் விழவும் வேண்டாம்!"

"உன்னுடைய இருதய அந்தரங்கத்தை நன்றாகச் சோதித்துப் பார், அருள்மொழி! உன் மகன் சக்கரவர்த்தியின் மகளை மணம் புரிந்து கொள்ள வேண்டுமென்னும் விருப்பம் லவலேசமும் உனக்கு இல்லையா?...."

"அதெல்லாம் அந்தக் காலத்தில், சுவாமி! தங்களிடம் சொல்லுவதற்கு என்ன? வெண்ணாற்றங்கரைப் போருக்கு முன்னால் அந்த மாதிரி ஒரு பைத்தியக்கார ஆசை என் மனத்தில் சில சமயம்

தோன்றியதுண்டு. அவ்விதம் ஏற்பட்டால் சோழ வம்சத்துக்கும் பல்லவ குலத்துக்கும் உள்ள பகை தீர்ந்து விடுமே! — என்று நினைத்ததுண்டு. ஆனால், எப்போது என் பிராணநாதர் போர்க் களத்தில் உயிரை இழந்தாரோ, அந்த க்ஷணத்திலேயே அந்த ஆசையை வேருடன் களைந்து எறிந்துவிட்டேன். இவ்வளவு நடந்துவிட்ட பிறகு என் மகன் சக்கரவர்த்தியின் மகளைக் கல்யாணம் செய்து கொள்வதைவிட, அவன் இறந்து விட்டான் என்ற செய்தியே எனக்கு அதிக மகிழ்ச்சியைத் தரும்!''

''அருள்மொழி! நீ அந்தக் குழந்தை குந்தவியைப் பார்த்ததில்லை; அதனால்தான் இப்படியெல்லாம் வெறுப்பாகப் பேசுகிறாய்.....''

''தாங்கள் பார்த்திருக்கிறீர்களா, சுவாமி?''

''பார்த்திருக்கிறேன், நெருங்கிப் பழகியும் இருக்கிறேன். என்னிடம் குந்தவிக்கு ரொம்பவும் பக்தி விசுவாசம் உண்டு. அம்மா! சிவஞான இன்பத்தின் சுவை கண்ட எனக்கு இந்தக் காலத்தில் வேறு எதன் மீதும் பற்றுக் கிடையாது. ஆனால் அந்தக் குழந்தையின் பாசம் மட்டும் போக மாட்டேன் என்கிறது. அவளோடு இரண்டு நாட்கள் பழகிவிட்டால் நீயும் அவ்விதம்தான் அவளிடம் பாசம் வைப்பாய்.....''





''வேண்டாம்! எனக்கு ஒருவரையும் இனிமேல் பார்க்க வேண்டாம்; பழகவும் வேண்டாம். இந்த உலகை விட்டுச் சென்று என் பதியை மீண்டும் அடையும் நாளை நான் எதிர்நோக்கிக் கொண்டிருக்கிறேன்....''

''அருள்மொழி! ஒரு காலத்தில் என்னை நீ ஒரு வரம் கேட்டு வாங்கிக் கொண்டாய். அதன்படியே உன் மகனுடைய உயிரைக் காப்பாற்றினேன். உன் பதியின் மரணத் தறுவாயில் நான் அளித்த வாக்கையும் நிறைவேற்றி

னேன். இதெல்லாம் உண்மையா, இல்லையா ?''

''ஆமாம், உண்மைதான்.''

''அதற்கெல்லாம் பிரதியாக இப்போது நான் உன்னிடம் ஒரு வரம் கேட்கப் போகிறேன். அதை நீ தட்டாமல் கொடுக்க வேண்டும்.''

'' சிவ சிவா !'' என்று சொல்லிக் கொண்டு அருள்மொழி எழுந்து கை கூப்பி நின்றாள்.

'' சுவாமி! இவ்விதம் என்னை அபசாரத்துக்கு உள்ளாக்கலாமா? அடியாளிடம் தாங்கள் வரம் கேட்பதா ? எனக்குக் கட்டளையிட வேண்டியவர் தாங்கள் !'' என்றாள்.

'' சரி கட்டளையிடுகிறேன். அதைத் தட்டாமல் நிறைவேற்ற வேண்டும்.''

''தங்களுடைய வார்த்தையை நான் தட்டுவேனா ? ஒருநாளும் இல்லை.''

''அப்படியானால் சொல்லுகிறேன், கேள்! என்றைக்காவது ஒரு நாள் சக்கரவர்த்தியின் மகள் குந்தவி உன்னிடம் வருவாள். அவள் தாயில்லாப் பெண். தாயின் அன்பு இன்றி அவளுடைய இருதயம் உலர்ந்து போயிருக்கிறது. அதனால்தான், அம்மா ! எனக்குக்கூட அவள் மேல் அவ்வளவு பாசம். அந்தக் குழந்தை உன்னிடம் வரும்போது அவளை நீ நிராகரிக்காதே. அன்புடன் உன் மகளைப் போல் ஏற்றுக் கொள். உன் மனப் புண் ஆறுவதற்கும்



அதுஅநுகூலமாயிருக்கும்!'' என்றார் சிவனடியார். அவருடைய கனிவு ததும்பிய குரலும் வார்த்தைகளும் அருள்மொழியின் மனத்தை உருக்கிவிட்டன.

'' தங்கள் ஆணைப்படி நடக்க முயற்சி செய்கிறேன், சுவாமி ! ஆனாலும், எங்கள் குலத்துக்கே ஜன்ம சத்துருவான ஒருவருடைய மகளிடம் நான் அன்பு செலுத்துவது எப்படி?...''

''தந்தை செய்த தீங்குக்காக மகளை வெறுப்பது என்ன நியாயம், அம்மா? மேலும், இன்னொரு விஷயம் சொல்லுகிறேன், கேள். உன் மகனுடைய உயி

ரைக் காப்பாற்றும் விஷயத்தில் குந்தவி தான் எனக்கு மிகவும் ஒத்தாசையாயிருந்தாள். விக்கிரமனுக்கு மரண தண்டனை நேராமல் தடுப்பதற்கு அவள் எவ்வளவு பிரயத்தனம் செய்தாள் தெரியுமா? இது நாள் வரையில் தந்தையின் வார்த்தைக்கு மறு வார்த்தை பேசி அறியாதவள், விக்கிரமனுக்காகச் சக்கரவர்த்தியிடம் எவ்வளவோ சண்டை பிடித்தாள்....''

'' அப்படியா, சுவாமி? அந்தக் குழந்தையைப் பார்க்க வேண்டும் என்று எனக்கும் ஆசை உண்டாகிறது. ஆனால், அவள் எதற்காக இந்த அபாக்கியசாலியைத் தேடிக் கொண்டு வரப் போகிறாள்?''

'' இல்லை, அம்மா! இல்லை. நீ அபாக்கியசாலி இல்லை. விக்கிரமனைப் போன்ற வீரப் புதல்வனைப் பெற்ற உன்னை அபாக்கியசாலி என்று சொல்ல முடியுமா? குந்தவியும் உன்னைத் தேடிக் கொண்டு வரத்தான் போகிறாள்; சீக்கிரத்திலேயே வருவாள்!'' என்றார் சிவனடியார்.

## அத்தியாயம் 14

# "வயதான தோஷந்தான்!"

அந்த நாளில் தமிழகத்தில் சைவ சமயமும் வைஷ்ணவ சமயமும் புத்துயிர் பெற்றுத் தளிர்க்கத் தொடங்கியிருந்தன. இவ்விரு சமயங்களிலும் பெரியார்கள் பலர் தோன்றி, திவ்ய ஸ்தல யாத்திரை என்ற வியாஜத்தில் தமிழ் நாடெங்கும் யாத்திரை செய்து, பக்திச் சுடர் விளக்கு ஏற்றி, ஞான ஒளியைப் பரப்பி வந்தார்கள். அமுதொழுகும் தமிழில் கவிதா ரஸமும் இசை இன்பமும் ததும்பும் தெய்வீகப் பாடல்களை இயற்றி வந்தார்கள்.

அந்நாளில் தமிழகத்தில் வாழ்ந்து வந்த சைவப் பெரியார்களுக்குள்ளே திருநாவுக்கரசர் இணையற்ற மகிமையுடன் விளங்கினார். மகேந்திரவர்ம சக்கரவர்த்தியின் காலத்திலேயே பிரசித்தி அடைந்து, தமிழகத்தின் போற்றுதலுக்கு உரியவராகிவிட்ட அப்பர் சுவாமிகள், விக்கிரமன் நாடு கடத்தப்பட்ட போது, முதிர்ந்த மூப்பின் காரணமாக அதிகமாய் நடமாடவும் இயலாத தள்ளாமையை அடைந்திருந்தார். அந்தத் தள்ளாத பிராயத்திலும் அவர் ஸ்தல யாத்திரை சென்றிருந்து சமீபத்தில் திரும்பி வந்திருக்கும் செய்தியைக் குந்தவி தேவி அறிந்தாள். அப்பெரியாரைத் தரிசிப்பதற்காகக் காஞ்சியில் பிரசித்தி பெற்று விளங்கிய சைவ மடாலயத்துக்கு ஒரு நாள் சென்றாள்.

முதிர்ந்து கனிந்த சைவப் பழமாக விளங்கிய அப்பர் சுவாமிகள், சக்கரவர்த்தியின் திருமகளை அன்புடன் வரவேற்று ஆசி கூறினார்.

அவரைப் பார்த்துக் குந்தவி, '' சுவாமி! இவ்வளவு தள்ளாத நிலைமையில் எதற்காகத் தாங்கள் பிரயாணம் செய்ய வேண்டும்? தாங்கள் தரிசிக்காத ஸ்தலமும் இருக்கிறதா? எங்கெங்கே போயிருந்தீர்கள்?'' என்று கேட்டாள்.

அதற்கு அப்பர், '' குழந்தாய்! தில்லைப் பதி வரையிலேதான் போயிருந்தேன். பொன்னம்பலத்தில் ஆடும் பெருமானை எத்தனை தடவை தரிசித்தால் தான் என்ன? இன்னுமொரு முறை கண்ணாரக் கண்டு இன்புற வேண்டும் என்ற ஆசை உண்டாகத்தான் செய்கிறது. ஆகா! அந்த ஆனந்த நடனத்தின் அற்புதத்தைத்தான் என்னவென்று வர்ணிப்பேன்? அந்தப் பேரானந்தத்தை அனுபவிப்பதற்காக மீண்டும் மீண்டும் மனிதப் பிறவி எடுக்கலாமே!'' என்று கூறி விட்டு, பாதி மூடிய கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருக, பின்வரும் பாசுரத்தைப் பாடினார் :

''குனித்த புருவமும், கொவ்வைச் செவ்
வாயில் குமிண் சிரிப்பும்
பனித்த சடையும், பவளம்போல்
மேனியில் பால் வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்தபொற்
பாதமும் காணப்பெற்றால்
மனிதப் பிறவியும் வேண்டுவதே
இந்த மாநிலத்தே!''

பாட்டு முடிந்த பிறகும் அப்பர் சுவாமிகள் சற்று நேரம் மெய்ம் மறந்து பரவச நிலையில் இருந்தார். முன்பெல்லாம் இப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில் குந்தவி பக்தி பரவசமடைந்து ஆனந்தக் கண்ணீர் பெருக்கியிருப்பாள். ஆனால், இன்றைக்கு அவள் மனம் அவ்வாறு பக்தியில் ஈடுபடவில்லை.

அப்பர் ஒருவாறு சுய உணர்வு அடைந்தபோது குந்தவி அவரை நோக்கி, ''சுவாமி! சோழ நாட்டில்

# க்ராக்ஜாக் 'ருசிப் போர்'




## சரி, சரி... இரண்டும் சரியே

# பார்லே க்ராக்ஜாக்

# பிஸ்கட்டுகள்

## அனுபவம் புதுமை ரசித்திடும் கணமே!




everest/547/PP-tm

யாரோ ஒரு சிவனடியார் புதிதாகத் தோன்றி ராஜரீகக் காரியங்களிலெல்லாம் தலையிடுகிறாராமே, தங்களுக்கு அவரைத் தெரியுமா?'' என்று வினவினாள்.

அவளுடைய வார்த்தைகளை அரை குறையாகவே கேட்ட அப்பெரியார், ''என்ன, குழந்தாய்! சோழ நாட்டில் தோன்றி யிருக்கும் சிவனடியாரைப் பற்றிக் கேட்கிறாயா? ஆகா! அவரைப் பார்க்கத்தானே, அம்மா, நான் முக்கியமாக யாத்திரை கிளம்பினேன்? நான் அவரைப் பார்க்க வருகிறேன் என்று தெரிந்ததும் அவரே என்னைத் தேடிக் கொண்டு புறப்பட்டார். தில்லைப் பதியிலே நாங்கள் சந்தித்தோம். ஆகா! அந்தப் பிள்ளைக்கு 'ஞான சம்பந்தன்' என்ற பெயர் எவ்வளவு பொருத்தம்! பால் மணம் மாறாத அந்தப் பாலருக்கு, எப்படித்தான் இவ்வளவு சிவஞானச் செல்வம் சித்தியாயிற்று? என்ன அருள்வாக்கு? அவர் ஞானப்பால் குடித்து வளர்ந்த பிள்ளை!— இல்லாவிட்டால் முகத்தில் மீசை முளைப்பதற்கு முன்னே இப்படிப்பட்ட தெய்விகப் பாடல்களை வெள்ளமாகப் பொழிய முடியுமா?'' என்றெல்லாம் அப்பர் பெருமான் வர்ணித்துக் கொண்டே போனார்.

குந்தவி பொறுத்துப் பொறுத்துப் பார்த்தாள். கடைசியில் குறுக்கிட்டு, ''சுவாமி! நான் ஒருவரைப் பற்றிக் கேட்கிறேன். தாங்கள் இன்னொருவரைப் பற்றிச் சொல்லுகிறீர்கள். நான் சொல்லும் சிவனடியார், முகத்தில் மீசை முளைக்காதவரல்ல; ஜடாமகுடதாரி; புலித்தோல் போர்த்தவர்'' என்றாள்.

''குழந்தாய்! நீ யாரைப் பற்றிக் கேட்கிறாயோ எனக்குத் தெரியாது! ஜடாமகுடத்துடன் புலித்தோல் தரித்த சிவனடியார்கள் எத்தனையோ பேர் இருக்கிறார்கள்; இந்த மடாலயத்திலேயே நூறு பேருக்கு மேல் இருப்பார்கள். வேறு ஏதாவது அடையாளம் உண்டானால் சொல்லு!'' என்றார் நாவுக்கரசர்.

''நான் சொல்லுகிற சிவனடியார் ராஜரீக விஷயங்களில் எல்லாம் தலையிடுவாராம். என்னுடைய தந்தைக்கு விரோதமாகக் கலகங்களை உண்டு பண்ணிக் கொண்டிருக்கிறாராம்....''

''என்ன சொன்னாய்? அம்மா! அதிசயமாயிருக்கிறதே! அப்படிப்பட்ட சிவனடியார் யாரையும் எனக்குத் தெரியாது. சைவத்தையும் வைஷ்ணவத்தையும் இரு கண்களைப் போல் காத்து வளர்த்து வருகிறவராயிற்றே, உன் தந்தை! நரசிம்மவர்ம சக்கரவர்த்தியின் ஆட்சியில், சிவனடியார்கள் எதற்காக ராஜரீகக் காரியங்களில் ஈடுபட வேண்டும்? அதுவும் உன் தந்தைக்கு விரோதமாகக் கலகத்தைக் கிளப்புவதா? வேடிக்கைதான்! அப்படி யாராவது இருந்தால், அவன் சைவனாகவோ, வைஷ்ணவனாகவோ இருக்க மாட்டான். பாஷாண்ட சமயத்தான் யாராவது செய்தால்தான் செய்யலாம்.''

''நான் போய் வருகிறேன், சுவாமி!'' என்று குந்தவி அவருக்கு நமஸ்கரித்து விடைபெற்றுக் கொண்டு கிளம்பினாள்.

பல்லக்கில் ஏறி அரண்மனைக்குப் போகும்போது அவள் பின்வருமாறு எண்ணமிட்டாள்:

'முதுமை வந்துவிட்டால் எவ்வளவு பெரியவர்களானாலும் இப்படி ஆகிவிடுவார்கள் போலிருக்கிறது! பேச ஆரம்பித்தால் நிறுத்தாமல் வழ வழவென்று பேசிக் கொண்டே போகிறார்! கேட்டதற்கு மறுமொழி உண்டா என்றால், அதுதான் கிடையாது! எல்லாம் வயதான தோஷந்தான்!'

(தொடரும்)

Interpub/GSC/2/76 Tml

# சிந்தால்

## இந்தியாவில் துர்நாற்றம் நீக்கும் ஒரே சோப்பு!




வியர்வையால் உண்டாகும்
உடல் துர்நாற்றத்தைத்
திறனுடன் தடுக்கிறது.

எவ்வொரு சோப்பும் செய்யாத
அளவில் உங்களை முழுமையான
புத்துணர்வுடன் திகழச்
செய்கிறது.

சிறப் பராமரிப்பிற்காக சரும
வல்லுநர்களால் சிபாரிசு செய்யப்பட்டது.

**விசேஷ சலுகை!**

**சிந்தால் சோப்பின் விலையில் 30 பைசா தள்ளுபடி**

முந்துங்கள்! சரக்கு உள்ளவரையே இச் சலுகை!!

போட்டிக் கதை :!!

# ஹோட்டல்

அன்னம்

என்னை நேமப் பாறைக்குப் போகச் சொல்லி என்னுடைய அலுவலகத்திலிருந்து உத்தரவு வந்தபோது எனக்கு இரட்டிப்பு மகிழ்ச்சி. ஒன்று நான் பதவி உயர்வு பெற்று அங்கு செல்கிறேன்; இரண்டாவது அங்கே நான் என் நெடுநாள் நண்பன் சாமாவைச் சந்திக்க முடியும்.

நேமப்பாறை சாமா என்றால் அங்கே தெரியாதவர்கள் இருக்க மாட்டார்கள். பஸ் நிலையத்தை யொட்டியுள்ள சங்கரி லஞ்ச் ஹோம் புரொப்ரைட்டர் அவன். ஹோட்டல் நடத்தி நிலையாக வாழ்ந்தவர்கள் கிடையாது என்று சொல்வார்கள். அந்தப் பேச்சுக்கு அவன் விதிவிலக்கு. சங்கரி லஞ்ச் ஹோம் மூன்று தலைமுறைகளாக நடக்கிறது.

திருச்சியில் சாமா என்னுடன் கல்லூரியில் படித்தான். யாருக்கும் அவன் எப்போதும் முதலிடத்தை விட்டுத் தந்ததில்லை. கல்லூரிப் படிப்பு முடிந்த பிறகு அவன் ஒரு பெரிய ஐ. ஏ. எஸ். அதிகாரியாகவோ, கல்லூரிப் பேராசிரியராகவோ வருவான் என்று எதிர்பார்த்தேன். அவனிடம் அது பற்றிக் கேட்கவும் செய்தேன்.

''அங்கேயெல்லாம் நான் ஏன் போகிறேன்? நேமப்பாறையில் எங்கள் ஹோட்டல் இருக்கிறது. அதைப் பார்த்துக் கொள்ளவே ஆள் போதவில்லை'' என்றான். பரீட்சை முடிந்ததும் என்னையும் நேமப்பாறைக்கு அழைத்துப் போனான்.

நேமப்பாறை பஸ் நிலையம் நான்கு சாலைகளின் சந்திப்பு. எப்போதும் பஸ்கள் வந்த வண்ணமும் புறப்பட்ட நிலையிலும் இருக்கும். புகை வண்டி நிலையம் இல்லாததால் மக்கள் பஸ்ஸையே நம்பி யிருந்தார்கள்.

அவனுடைய ஹோட்டல் சாதாரண ஓட்டுக் கட்டடம்தான். ஆனால் அதற்குள் உட்காரக்கூட இடம் இல்லாமல் கூட்டம். என்ன வேகம்! என்ன சுறுசுறுப்பு! சாமாவின் தாத்தா அடுப்படியில் நின்று பார்த்துக் கொள்கிறார். பம்பரம் போல் சர்வர்கள் சுழன்றார்கள். நான் நேமப்பாறையில் தங்கிய மூன்று நாட்களிலும் எனக்கு அந்த ஹோட்டல் சாப்பாடுதான்... காப்பிதான்... எல்லாமே அமிருதம். அதற்கும் ஒரு படி மேலே.

நெருங்கிய தோழன் ஊருக்கு அழைத்துப் போய்த் தன் வீட்டில் தங்க வைக்கலாம். ஒரு ஹோட்டலில் சாப்பிட வைத்ததற்கு முக்கிய காரணம் இருந்தது. சாமா என் நெருங்கிய நண்பன்தான். ஆனால் நான் அக்கிரகாரத்து வகுப்பைச் சேர்ந்தவன் இல்லையே... வால்குடியில் நிலச் சாகுபடி செய்து கொண்டிருந்த குடியானவன் முத்து சேர்வையின் மகன்—இந்த நமசிவாயம் — நேமப்பாறையில் பிரபல அந்தண குடும்பத்தில் ஒரே வாரிசான சாமாவுடன் அவன் வீட்டில் சம பந்தியில் அமர முடியுமா?

சாமா என் சௌகரியங்களைக் கவனித்துக் கொண்டான். ஊரைச் சுற்றிக் காண்பித்தான். தன் வீட்டுக்கு மட்டும் அழைத்துப் போகவில்லை. அவன் அப்பாவும் தாத்தாவும் — வழக்கமாகப் பில்லுக்குப் பணம் கொடுக்காமல் போகும் சில பெரிய மனிதர்கள் ஜாபிதாவில் என்னையும் 'தாற்காலிகமாக'ச் சேர்த்துக் கொண்டார்கள்.

ஒரு நாள் பிற்பகல் நான்கு மணி இருக்கும் காப்பி சாப்பிடுவதற்காகச் சாமா தன் ஹோட்டலுக்கு அழைத்துப் போனான். அவன் அப்பா உள்ளே இருந்தார். தாத்தா கல்லாவில் உட்கார்ந்திருந்தார். தன் கையால் ''டிகிரி'' காபி கொண்டு வருவதாகக் கூறிவிட்டுச் சாமா உள்ளே போனான். கல்லாவில் உட்கார்ந்திருந்த அவன் தாத்தாவின் குரல் சற்று உரத்துக் கேட்கவே நான் என் செவிகளை அந்தப் பக்கம் திருப்பினேன்.

''வேலை காலி இல்லைனு யார் சொன்னது? இருக்கு... இன்னும் நாலு சர்வர் எனக்கு வேணும்தான்... நீ மட்டும் பிராமணப் பையனாக இருந்தால் வேலைக்கு எடுத்துக் கொண்டுடுவேன்... என்னை என்ன செய்யச் சொல்றே!'' என்று கூறிக் கொண்டிருந்தார்.

நான் என் பார்வையை ஓட்டலினுள் ஓட விட்டேன். அங்கிருந்தவர்கள் எல்லோரும் அந்தணர்களாகத்தான் தெரிந்தது.

''நான் ஏழை ஸார்! வேறு வழியில்லை. என்ன வேலை கொடுத்தாலும் செய்யறேன்!'' என்று கெஞ்சிக் கொண்டிருந்தான் அந்த வாலிபன்.

''ஏழைன்னு ஒரு வேளைச் சாப்பாடு இனாமாப் போடலாம். என்னாலே முடிஞ்சது அவ்வளவுதான். கூட்ட நேரத்திலே நச்சு நச்சுன்னு பிடுங்காதே போ!'' என்று விரட்டினார் அவர்.

இந்தச் சம்பவம் பதினெட்டு ஆண்டுகளுக்கு முன்பு நடந்தது. இத்தனை கண்டிப்பாகப்

பேச அந்த மனிதருக்குத் துணிச்சல் அசாதாரணம்தான்.

நான் சாமாவிடம் கேட்டேன்: ''உன் தாத்தா பத்தாம் பசலியாக இருக்கிறார். காலத்தோடு மாறிப் போக இவர் கற்றுக் கொள்ள வேண்டும்!'' என்றேன்.

சாமா அதை மறுத்தான். ''அவர் சொன்னதில் என்ன தப்பு?... 'எந்த வேலையையும் கொடு!' என்றான் அவன். ஆனால் இங்கு இருப்பவர்கள் வேறு எந்த வேலைக்கும் லாயக்கில்லாதவர்கள். படிப்புக் கிடையாது. வயிறு மட்டும் இருக்கிறது. காப்பாற்றக் குடும்பம் உண்டு. இப்படிப்பட்ட பிராமண வாலிபர்களுக்கு நாங்கள் ஏன் ஆதரவு காட்டக் கூடாது?... நமக!... இந்த ஹோட்டலை என் அப்பாவின் தாத்தா வயிற்று ஜீவனுக்காகத்தான் ஆரம்பித்தார். இப்போது எங்களுக்கு வசதி இருக்கிறது. இதை இழுத்து மூடி விட்டால் உட்கார்ந்து சாப்பிட இரண்டு தலைமுறைக்குச் சொத்து இருக்கிறது. வேறு வேலை தேடிக் கொள்ளப் படிப்பும் இருக்கிறது. இப்போது நாங்கள் செய்வது வியாபாரம் இல்லை. ஓர் உபாசனையாக நினைத்துத்தான் நடத்துகிறோம்....'' என்றான் வேகமாக.

அந்தக் கேள்வியைக் கேட்டிருக்கக் கூடாது என்று நான் அப்போது வேதனைப்பட்டது உண்டு.

வருஷங்கள் ஓடிக் கொண்டிருந்தன. என் கல்யாணத்துக்குச் சாமா வந்திருந்தான். தாலி கட்டும்வரை இருந்து விட்டுப் போயிருந்தான். கையைக்கூட நனைக்கவில்லை. நானும் அவனை வற்புறுத்தவில்லை.

அதற்குப் பிறகு ஒவ்வொரு பொங்கலுக்கும் நான் அவனுக்கு ஒரு வாழ்த்து அனுப்புவேன். வருடப் பிறப்புக்கு அவன் ஒன்று அனுப்பி வைப்பான். அவன் தாத்தா — அவன் தந்தை எல்லோரும் இப்போது இல்லை. ஹோட்டல் தன் பொறுப்பில் நன்றாக நடந்து வருவதாகவும் பக்கத்தில் ஒரு ''லாட்ஜ்'' கட்டியிருப்பதாகவும் ஒரு முறை எழுதியிருந்தான்.

நேமப்பாறையில் என்னைச் சந்திக்க என் ''ஆபீஸ்'' அப்படியே காத்திருந்தது. ''தங்குவதற்கு எங்கு ஏற்பாடு செய்யட்டும்?'' என்று ஹெட் கிளார்க் விசாரித்தார். ''சங்கரி லாட்ஜ்'' என்றேன். என்னை அவர் வியப்புடன் பார்த்தார். ''இதற்கு முன் இங்கு வந்திருக்கிறீர்களா?'' என்று கேட்டார்.

''ஒரு முறை!'' என்றேன்.

''சங்கரி லஞ்ச் ஹோம்'' முன்பு இருந்தது போலவேதான் காணப்பட்டது. போர்டுகள் மட்டும் புதிதாகத் தெரிந்தன. ''ஜனதாச் சாப்பாடு கிடைக்கும்'' எனப் புதிதாக ஒன்று மாட்டப்பட்டிருந்தது. இட்டிலி, பூரி, விலையையும் எடையையும் பெரிதாக எழுதி வைத்திருந்தார்கள்.

கல்லாவில் நான் சாமாவை எதிர்பார்த்தேன். ஆனால் ஒரு வாலிபன் — நல்ல சிவந்த நிறம் — நெற்றியில் பட்டையாக விபூதி, குங்குமம். வயது முப்பதுக்குள் இருக்கும்.— உட்கார்ந்திருந்தான்.



''சாமா இல்லையா?'' என்று கேட்டேன்.

''வீட்டில் இருக்கிறார்.... நீங்கள்...''

''என் பெயர் நமசிவாயம். சாமாவுக்கு ரொம்பவும் வேண்டியவன். எப்போது வருவான்?''

''ஆறு மாதங்களாக அவர் கடைக்கு வருவதில்லை. நான்தான் கடையைப் பார்த்துக் கொள்கிறேன்...''

''நீங்கள்?''.. எனக் கேட்டு நிறுத்தினேன்.

அவன் சட்டென்று பதில் சொல்லவில்லை.

பக்கத்திலிருந்த பையன் ''ஐயாவோட மருமகப் புள்ளைங்க... நீங்க வாங்க... பத்தாம் நெம்பர் ரூம்.... நல்ல சௌகரியமா காற்றோட்டமாக இருக்கும்...'' என்று அழைத்துப் போனான்.

பழைய லஞ்ச் ஹோம் பக்கத்தில் புதிதாக இரண்டு மாடிக் கட்டிடமாக ''சங்கரி லாட்ஜ்' வளர்ந்திருந்தது. என்னுடைய அறை முதல் மாடியில் இருந்தது. நான் மௌனமாக அறைக்குப் போனேன். சாமாவுக்கு ஒரே பெண் என்று எனக்குத் தெரியும். அவன் என்னுடன் படித்துக் கொண்டிருந்தபோதே திருமணம் ஆகிவிட்டது. பரீட்சைக்கு முதல் நாள் பெண் பிறந்திருப்பதாகத் தந்தி வந்தது. 'அந்தப் பரீட்சையில் பாஸ்... இந்தப் பரீட்சையில்?' என்று அவனைக் கேலி செய்தது கவனத்துக்கு வந்தது. அவன் ஏன் தன் பெண் திருமணத்துக்கு அழைப்பு அனுப்பவில்லை? அனுப்பியிருப்பான். எனக்குக் கிடைத்திருக்காது. அவனைப் பார்க்கும் ஆவல் எனக்கு அதிகமாகியது.

என் சிந்தனையின் ஓட்டத்தை என் ஆபீஸ் ஹெட் கிளார்க் புரிந்து கொண்டிருந்தார். ''ஸாருக்குத் தெரியாதுன்னு நினைக்கிறேன்... நீங்க பார்த்த பையன் -- சாமா ஐயரின் மாப்பிள்ளை... ஒரு ஹரிஜன்... கொல்லி மலையைச் சேர்ந்த பையன்...'' என்றார்.

நான் சட்டென்று திரும்பினேன். ''நோ! இருக்காது... நான் நம்ப மாட்டேன்!'' என்றேன்.

''நாங்களும்தான் நம்பவில்லை. உண்மை என்னமோ அதுதான். அந்தப் பையன் கொஞ்ச நாட்களாக சர்வராக இருந்தான். திடீரென்று ஒரு நாள் 'இவன்தான் என் மாப்பிள்ளை!' என் கல்லாவில் உட்கார்த்தி வைத்து விட்டார்!'' என்றார் அவர்.

உடனடியாகக் கவனிக்க வேண்டிய வேலை நிறைய இருந்தது. எனக்கு முன் இருந்தவர் பத்து தினங்கள் முன்பு விடுப்பில் சென்றிருந்தமையால் பார்க்க வேண்டிய ''ஃபைல்''கள் குவிந்திருந்தன. மாலையில்தான் திரும்பினேன். என் அறைக் கதவைத் திறந்து உள்ளே நுழைந்ததும் முதலாளி ஐயா பார்த்து வரச் சொன்னதாக ஒரு பையன் வந்து நின்றான்.

சாமா வந்து விட்டானா? ஆவலுடன் அந்தப் பையன் பின்னால் சென்றேன்.

அவன்தான் ஒரு சோபாவில் உட்கார்ந்திருந்தான். தலையில் முக்கால்பங்கு வழுக்கை. கண்கள் இடுங்கி யிருந்தாலும் கூர்மையான பார்வை.

''வாடா! நமசி! வா!... பெரிய ஆபீஸராகப் போய் விட்டாய். வரப்போவதாக ஒரு கார்டு போடக் கூடாது?... லாட்ஜில் தான் தங்குவாயா? 'ஏண்டா சாமா!' ன்னு கூப்பிட்டுக் கொண்டு வீட்டுக்குத்தானேடா வரணும்!'' என்று கேட்டான் சாமா.

''உன் வீட்டுக்கா? நானா?...'' என்றேன் என் செவியை நம்ப முடியாமல்.

சாமா என்னை ஒரு மாதிரியாகப் பார்த்தான். பிறகு எதையோ நினைத்துக்கொண்டு தலையைக் குலுக்கிக் கொண்டான்.

''ஓ! அந்தப் பழைய சாமாவைச் சொல்கிறாயா?... அவன் போய்விட்டான்டா, நமசி ...செத்துத் தொலைந்து போய்விட்டான்!'' என்றான் சாமா. அவன் கண்களில் நீர் துளித்தது.

''என்னப்பா இது... சின்னக் குழந்தை மாதிரி... இருந்து இருந்து ஒரு பெண்ணுக்குக் கல்யாணம் செய்திருக்கிறாய்!... எனக்கு ஓர் அழைப்பைக் காணோம்...'' என்று வேடிக்கையாக முனகினேன்.

சாமா உரக்கச் சிரித்தான். ''என் பெண் கல்யாணமா?... நான் நினைத்தபடி நடந்திருந்தால் உனக்கு அழைப்பு என்ன? நேரேயே வந்து கட்டி இழுத்து வந்திருப்பேன். இது சும்மா தானம் கொடுக்கிற மாதிரி — ஐஸ்ட் லைக் தட் — முடிந்து விட்டது!'' என்று ஒரு கைவிரலைச் சொடுக்கிக் காண்பித்தான்.

''பையனைப் பார்த்தேன்!'' என்றேன்.

''பார்த்தாயா? எப்படி இருக்கிறான்... நல்ல பர்சனாலிடி?... எத்தனை சுறுசுறுப்பு பார்த்தாயா? ... கடையில் நல்ல லாபம்... லாட்ஜில் எப்பொழுதும் கூட்டம்... என்ன சாமர்த்தியம், என்ன சாமர்த்தியம்... இந்தச் சாமிநாத ஐயரின் மாப்பிள்ளை செல்லப்பன் திறமை...''

''கேள்விப்பட்டேன்!''

''என்ன கேள்விப்பட்டாய்?...'' சாமாவுக்குப் பைத்தியம் பிடித்து விட்டது. 'தன் ஒரே பெண்ணை ஒரு பறையனுக்குக் கட்டி வைத்துப் புரட்சி செய்து விட்டான்' என்று தானே?''

''நான் அப்படி நினைக்கவில்லை. இதெல்லாம் இந்தக் காலத்தில் சகஜமாக நடப்பது தானே?''

''உலகத்தில் நடக்கலாம். ஆனால் நேமப் பாறை சாமிநாத ஐயர் குடும்பத்தில் இப்படி நடக்கலாமா என்று அங்கலாய்ப்பவர்கள் எத்தனை பேர் இருக்கிறார்கள் தெரியுமா?''

''போகட்டும்! அவர்கள் ஒற்றுமையாக, ஒருவருக்கொருவர் அனுசரணையாக இருந்தால் சரி!'' என்றேன் நான்.

''இதெல்லாம் நாமாகக் கற்பித்துக்கொள்ளும் சமாதானம்... நான் ஏமாந்து விட்டேன்டா நமசி!... ஒரு பொடிப் பயல் என்னை நன்றாக ஏமாற்றி விட்டான்!'' என்ற சாமா விவரமாகச் சொல்ல ஆரம்பித்தான்.

ஒரு நாள் பகல் மூன்று மணி. இருபத்தைந்து வயது இருக்கும் ஒரு பையன். காப்பியைச் சாப்பிட்டுவிட்டு நாற்பது பைசா பில்லைக் கொடுத்தான். நாலு முழ வேஷ்டியும் கைத்தறிச் சட்டையும் போட்டிருந்தான். பார்க்கக் கண்ணியமாகத் தெரிந்தான். பில்

---

''உங்கள் கணவரை ஆபீஸில் ஓ'ய்வு தள்ளி விட்டாங்களாமே, அநியாயமா இருக்கே!''

''அதில்லீங்க. மேட்டூரிலிருந்து பள்ளத்தூருக்கு டிரான்ஸ்பர் பண்ணிட்டாங்க.

- தே. கணேஷ் குமார்

